2 பக்கங்கள் 15காசுகள்

பதிவு. எண் எம். 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 12—1—75 ஞாயிறு மலர்: 314

## தமிழ்நாடு சிமிண்டில் போராட்டம் தொடர்கிறது

ஆலங்குளம், ஜன. 10—

தமிழ்நாடு சிமிண்டில் நடைபெறும் வேலைநிறுத்தத்தின் தொடர்ச்சி ாகக நேற்று (ஜன. 9-ல்) தோழர் ராமசாமிப் பாண்டியன் தலைமையில் 4பேர் மறியல் செய்து கைதாயினர். இதுவரை கைதானோர் 512 பேர். கோரிக்கை நிறைவேறும் வரையான உண்ணாவிரதத்தை சீதாவரதராஜன் (சிஐடியூ) சுப்ரமணியம் (திமுஊச) ஏ.பழனிச்சாமி(அதிமுக) மேற்கொண்டுள்ளனர்.

### போராடும் சர்க்கரை ஆலைதொழிலாளர்களை

## குடியிருப்பிலிருந்து வெளியேற்றும் கொடுமை

மதுரை, ஜன. 10—

ஊதிய உயர்வு முதலிய கோரிக்கைகளுக்காக தமிழக சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் டிச. 23-ந் தேதி முதல் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

இந்த வேலைநிறுத்தத்தை உடைக்கும் நோக்கத்துடன் 'வேலைக்குத் திருமபுங்கள் — அலலது குடியிருப்புகளிலிருந்து வெளியேறுங்கள்' என்று நிர்வாகம் தொழிலாளர்களுக்கு நோட்டீஸ் கொடுத்துள்ளது. இதற்கு தொழிலாளர்களும் சுற்றுப்பகுதி மக்களும் கடுமையான எதிர்ப்பு தெரிவித்துள்ளனர்.

### மத்திய-மாநில அரசு அலுவலகங்கள் முன்

# ஜனவரி 20-ல் மறியல்

## மக்களுக்கு உணவு கோரி மார்க்சிஸ்ட் கட்சியின் கிளர்ச்சி

மதுரை, ஜன. 10—

தமிழ்நாடு முழுவதும் சட்டபூர்வ ரேஷன் மூலம் மக்களுக்கு மலிவு விலையில் உணவுப் பொருட்கள் வழங்கக் கோரியும், மற்றும் பல கோரிக்கைகளை வற்புறுத்தியும்—இம்மாதம் 20-ந் தேதி தமிழகம் முழுவதும் மத்திய-மாநில அரசு அலுவலகங்கள் முன்பு மறியல் போராட்டத்தில் இறங்குமாறு தமிழக மக்களுக்கு, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில செயற் குழு அறைகூவல் விடுத்துள்ளது.

இதுகுறித்து கட்சியின் மாநில செயற் குழு விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

பத்து ஏக்கருக்கு மேல் நிலம் உள்ளவர்களிடம் உபரி நெல் முழுவதையும் கட்டாயக் கொள்முதல் செய்து, சட்டபூர்வ ரேசன் மூலம் மக்களுக்கு மலிவு விலையில் அரிசி விநியோகம் செய்ய வேண்டுமென்றும், வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் எல்லாவித வரிகளையும் ரத்துசெய்வதோடு, அங்குள்ள விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஏழை மக்களுக்கும் இலவச உணவு மற்றும் குடிநீர் வசதி செய்து தர வேண்டுமென்றும் திமுக அரசை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு வற்புறுத்தி நிறைவேற்றிய தீர்மானம் ஏற்கனவே பிரசுரிக்கப் பட்டுள்ளது.

### மத்திய அரசு வற்புறுத்தல்

தனது உணவு கையிருப்பிலிருந்து தமிழகத்துக்கு கணிசமான அளவு அரிசியையும் கோதுமையையும் இதர உணவு பொருள்களையும் மத்திய அரசு கொடுத்து உதவ வேண்டுமென்றும், வறட்சி நிவாரணத்துக்காக தேவைப்படும் நிதி உதவியையும் மத்தியஅரசு தாமதமின்றி செய்ய வேண்டுமென்றும் மேற்படி தீர்மானத்தில் வற்புறுத்தியுள்ளோம்.

இக் கோரிக்கைகளுக்கு பொதுஜன ஆதரவைத் திரட்டும் முறையிலும் மத்திய-மாநில அரசுகளின் கவனத்தை ஈர்க்கும் முறையிலும், **ஜனவரி 20-ம் தேதியன்று** தமிழகமெங்கும் **மத்ய-மாநில அரசு அலுவலகங்களின் முன்பு** மறியல் செய்யுமாறு சகல ஜனநாயக அமைப்புகளையும், தமிழ் மக்களையும்வேண்டிக் கொள்கிறோம். இதே தேதியில் இந்த கோரிக்கைகளுக்காக, மாநிலம் முழுவதும் மறியல் நடத்துவதென்று தமிழக ஜனநாயக மாதர் சங்கம் முடிவெடுத்திருப்பதை வரவேற்கிறோம்.

இந்த மறியல் போராட்டத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கான சகல ஏற்பாடுகளையும் விரிவாகச் செய்யுமாறு கட்சியின் மாவட்ட குழுக்களையும இதர சகல மட்ட கட்சி அமைப்புகளையும் கேட்டுக் கொள்கிறோம.

### மிஸ்ரா கொலை:

## மார்க்சிஸ்ட் கட்சி பொலிட்பீரோ அறிக்கை

கல்கத்தா, ஜன 10—

இரயில்வே மந்திரி எல் என் மிஸ்ராவின் கொலையைக் கண்டித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ கடந்த 3-ம் தேதியே ஓர் அறிக்கை வெளியிட்டது. அதன் சுருக்கத்தை ''டைம்ஸ் ஆப் இந்தியா'' (4—1—75) பத்திரிகை வெளியிட்டுள்ளது. அதில் குறிப்பிடப்பட்டிருப்பதாவது:—

### வெகுஜன இயக்கத்தை வன்முறை பாதிக்கும்

''மேற்கு வங்கத்திலும், கேரளத்திலும் நாட்டின் இதர பகுதிகளிலும் எங்களது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களும் ஆதரவாளர்களும் ஏராளமானோர் ஆளும் கட்சி உறுப்பினர்களால் படுகொலை செய்யப்பட்டிருந்தாலும்—ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களையும் சரி, அல்லது வேறு எந்தக் கட்சிகளைச் சேர்ந்தவர்களையும் சரி—தனிப்பட்ட நபரைக் கொலை செய்வது, தாக்குவது போன்ற பலாத்காரத்தை நாங்கள் எதிர்க்கிறோம்.

''ஆளும் கட்சிக்கு எதிராக, பீகாரில் ஒரு மாபெரும் வெகுஜன இயக்கம் வளர்ந்திருக்கின்ற நிலையில், இத்தகைய செயல் மக்களின் இலட்சியத்துக்கு பாதிப்பை ஏற்படுத்தும்; வெகுஜன இயக்கத்திற்கு எதிராக இச்செயலை அரசாங்கம் பயன்படுத்திக் கொள்ளும்.

''இச்சம்பவம் குறித்து தீவிர விசாரணை நடத்த வேண்டியது அவசர அவசியம ஆகும்'.

## சர்வகட்சிகள் அடங்கிய தேர்தல் கமிஷன் அவசியம்

### தோழர் சுந்தரய்யா வலியுறுத்தல்

கட்டாக் ஜன 9—

நாட்டில் தேர்தலை நடத்தவும், கண்காணிக்கவும் அனைத்துக் கட்சிகள் கொண்ட கமிஷன் நிறுவப்படவேண்டும் என மார்க்சிஸ்ட் கம்யூ. கட்சி பொது செயலாளர் தோழர் பி சுந்தரய்யா கட்டாக்கில் இன்று நிருபர்களிடையே கூறினார்.

நியாயமான நேர்மையான தேர்தல் நடத்த அக் கமிஷனை அமைக்குமாறு ஜனநாயக, முற்போக்கு கட்சிகள் கோர வேண்டும் என்றும் அவர் வலியுறுத்தினார்.

ஏதாவது ஒரு தேர்தலை மோசடி என்றும் நியாயமற்ற முறையில் நடந்தது என்றும் அக்கமிஷன் கூறுமானால் அத்தேர்தல் செல்லாதுஎன பிரகடனப் படுத்த வேண்டும் என்றும் தோழர் சுந்தரய்யா கூறினார்.

தனியொரு தொகுதி முறை என்பது நீக்கப்பட்டு பல தொகுதி முறை கொண்டுவரப்பட வேண்டும். போடப்பட்ட வாக்குகளின் அடிப்படையில் ஒவ்வொரு அரசியல் கட்சிகளுக்கும் விகிதாச்சார முறையில் இடம் கொடுக்கப்பட வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினரை திருப்பி அழைக்கும் உரிமையும் இருகக வேண்டும் என்றும் தோழர் சுந்தரய்யா கூறினார்.

### மாணவர்கள் மீது போலீஸ் தடியடி

வடகரை, ஜன 10—

கேரளத்தில் மாணவர்கள் மீது போலீஸ் நடத்திய தடியடியினால் இந்திய மாணவர் சங்க (எஸ் எப் ஐ) ஊழியர்கள் படுகாயமுற்றனர்.

வடகரை என்ற ஊரில் சென்ற 8-ம் தேதியன்று இந்தத்தாக்குதல் நடந்தது.

இந்திய மாணவர் சங்கத்தின மாவட்ட உதவி செயலாளர் இ.வி. தயாநந்தன், மாவட்டக்குழு உறுப்பினர் பி. சசி ஆகியோர் படுகாயமுற்று மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்.

சஸ்பெண்ட்செய்யப்பட்ட கல்லூரி மாணவர்களை திரும்ப சேர்த்துககொள்ள வேண்டுமெனககோரி ஆர்ப்பாட்ட ஊர்வலமாக மாணவர்கள் வந்தபோதே, போலீஸ் அவர்கள் மீது அக்கிரமமாகத தடியடி நடத்தியது.

## கட்சி-தீக்கதிர் வளர்ச்சி நிதி:

### காவேரிமில் தொழிலாளர்கள் சார்பில் ரூ. 1144

காவேரிநகர், ஜன. 10—

தொழிலாளர்களின் நீண்டபோராட்டத்துக்குப்பின் கிடைத்த போனஸ் தொகையிலிருந்து, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி தீககதிர் வளர்ச்சி நிதிக்காக காவேரி மில் தொழிலாளர்கள் ரூ. 1144 வழங்கினர். இந்த நிதியை கட்சியின் திருச்சி மாவட்டச் செயலாளரும். சி. ஐ. டி. யூ. தலைவருமான தோழர் பி. ராமச்சந்திரன் பெற்றுக்கொண்டார்.

# இரண்டரை லட்சம் சணல் ஆலை தொழிலாளர்கள் ஸ்ட்ரைக்!

## மாநில அரசு ஊழியரும் துறைமுகத்தொழிலாளரும் போரில்

கல்கத்தா, ஜன. 10—

மேற்குவங்கத்திலுள்ள 62 சணல் ஆலைகளில் பணிபுரியும் இரண்டரை லட்சம் தொழிலாளர்கள் ஜனவரி 6-ம் தேதி முதல் போர்க்கொடி உயர்த்தி விட்டார்கள். ஆலைகளின் சக்கரங்கள் சுழலவில்லை; சிம்னிகளும் புகை கக்கவில்லை.

ஊதிய முடக்கத்தை ரத்துச் செய்! ஆள்தூக்கி கறுப்புச்சட்டத்தை ரத்துச் செய்! பஞ்சப்படியை உயர்த்து! 20 சதமான போனஸ் கொடு! தற்காலிகத் தொழிலாளர்களுக்கு நிவாரணம் வழங்கு! சணல் ஆலைகளையும், சணல் கொள்முதலையும், ஏற்றுமதி வர்த்தகத்தையும் அரசுடைமை ஆக்கு!—என்பதே அவர்களது கோரிக்கைகள்!

இந்த வேலைநிறுத்த போராட்டத்துக்கு சி ஐ டி யூ, ஏ ஐ டி யூ சி, ஐ என் டி யூ சி ஆகிய அனைத்துச் சங்கங்களும் அறைகூவல் விடுத்தன.

இது அரைகுறை வேலை நிறுத்தம்தான் என்று கதையடிதது வந்த சணல் ஆலை முதலாளி சங்கத் தலைவர்கள், இப்போது, இது பூரணவேலை நிறுத்தமதான் என்று கூறத் தொடங்கிவிட்டார்கள்.

மத்தியத் தொழிற்சங்கங்கள் ஒவ்வொன்றும் தனிததனியே அறிக்கைகள் விட்டு தொழிலாளர்களின் ஒற்றுமையையும் உறுதியையும் பாராட்டியுள்ளன.

### தினம் ஒரு கோடி நட்டம் ஆலை அதிபர்கள் ஓலம்

இந்த வேலை நிறுத்தத்தின் விளைவாக, தினம ஒரு கோடி ரூபாய் நட்டமாவதாக ஆலை அதிபர்கள் ஓலமிடுகிறார்கள். ஏற்றுமதி மூலம கிடைததிடும் அன்னிய நாணயச் செலாவணியும் நட்டமென்று அழுகிறார்கள்.

### கோரிக்கைகள்

சணல் தொழிலாளர்கள் கோருவது என்ன? விசாரணையில்லாது சிறையிலடைக்கும் ஆள் தூக்கி சட்டத்தை ரத்து செய்! ஊதிய முடக்கத்தை ரத்து செய்! பஞ்சப்படி கொடுப்பதில், வாழ்க்கை புள்ளியை கணக்கிடுவதின் மூலம் தில்லுமுல்லு செய்வதை நிறுததவேண்டும். விலைவாசி மிகவும் கூடியுள்ள இச்சமயத்தில், முன்னைய பஞ்சப்படியை விட கூடுதலாக 16 ரூபாய்தான்கொடுத்துஏமாற்றுகிறார்கள் உண்மையில் ரூ 63 கொடுக்க வேண்டும் என்கிறார்கள் தொழிலாளர்கள்.

மின்வெட்டு ஏற்பட்டாலும், வாரத்திற்கு 48 மணி நேர வேலைக்கு உரிய ஊதியத்துக்கு உத்தரவாதம் வேண்டும் என்கிறார்கள்.

விவசாயிகளிடம் சணல் கொள்முதல் செய்வதிலிருந்து, சணல் சரக்குகளை உற்பத்தி செய்வதையும், உள்நாட்டுக்கும், வெளிநாட்டுக்கும ஏற்றுமதி செய்வதையும் தேசீயமயமாக்க வேண்டுமென்றும் கோருகிறார்கள்.

மற்றும் 20 சத போனஸ், ரேஷன் முறை, மலிவு தான்யக் கடை, கிராச்சுட்டிக்கு வருடத்தில் 15 நாள் சம்பளம் இ. எஸ் ஐ யின் முழுச் செலவுக்கும் முதலாளிகளே பணம் கட்டவேண்டும் என்று கோருகிறார்கள்.

### பி. டி. ரணதிவே வாழ்த்து

கடந்த டிசம்பர் மாத ஆரம்பத்தில் நடந்த சணல் ஆலைத் தொழிலாளர் சங்க மாநாட்டில் சி ஐ டி யூ தலைவர் தோழர் பி டி ரணதிவே பேசினார்.

இரண்டரை லட்சம் தொழிலாளர்களும் தங்கள் கோரிக்கைக்காகவும, அரை பாசிச பயங்கரத்தை எதிர்த்தும் வேலை நிறுத்தப்போராட்டததில் இறங்கவேண்டுமென்றும்—அந்தப் போராட்டத்தின் ஒற்றுமையும உறுதியும, பல்வேறு பகுதி மககளுக்கும் தைரியத்தையும் நம்பிக்கையையும் அளிப்பதுடன் எதிரிகளுக்கு அச்சத்தை உண்டாக்கி பின் வாங்கச் செய்யுமென்றும் கூறினார்.

உலக முதலாளித்துவத்துக்கு நெருக்கடி ஏற்பட்டுள்ள இன்று, இந்திய முதலாளிகள் நெருக்கடியின் சுமைகளை இந்தியத் தொழிலாளர்கள் தலையில் சுமத்த முயல்வதாகவும்—அதைத்தொழிலாளர்கள் எதிர்ப்பதால், முதலாளிகளின் சர்க்கார், அரசியல் சட்டத்தைத் தூக்கியெறிந்து விட்டு, பாசிஸ பயங்கர அடக்குமுறைகளை ஏவிவிடுவதாகவும், தொழிலாளி வர்க்கம் ஒன்றுபட்டு நெஞ்சு நிமிர்த்தி நிற்பதுடன், விவசாய மக்களுடனும், கைகோர்த்து போராடினால், வெற்றி நிச்சயம என்றும் வழி காட்டினார்.

இந்த சி ஐ டி யூ சங்க மாநாட்டில், சணல் ஆலைத் தொழிலாளர் போராட்டத்தில் ஒன்றுசேர வருமாறு, ஐ என் டி யூ சி, ஏ ஐ டி யூசி, எச் எம் எஸ், யு டி யூ சி முதலான சகல சங்கங்களுக்கும் வேண்டுகோள் விடப்பட்டது.

ஏற்கெனவே இரண்டு ஆண்டுகளுக்கு முன் சணல் ஆலைத தொழிலாளர்கள் 33 நாட்கள் வரை போராடி, முதலாளிகளிடமிருந்தும் அரசினரிடமிருந்தும் பல வாக்குறுதிகளைப் பெற்றார்கள், ஆனால் வாக்குறுதிகளைக் காப்பாற்றும் யோக்கியதை அவர்களுக்கு என்றுமே இருந்ததில்லை,

அவர்களுக்குப் புரியக்கூடிய பாஷை ஒன்றேஒன்றுதான். அதுதான் ஒன்றுபட்ட வேலை நிறுத்தம் என்று தொழிற்சங்கத் தலைவர்கள் தமது அனுபவத்தைக் கூறுகிறார்கள்,

### துறைமுகத்தொழிலாளரும்

சணல் ஆலைத்தொழிலாளர் வேலை நிறுததம் ஒருபுறமிருக்க- இந்தியாவிலுள்ள 8 பெரிய துறைமுகங்களில் பணிபுரியும் 2 லட்சம் தொழிலாளர்களும், இம்மாதம் 16 -ம் தேதி முதல் வேலைநிறுத்தப் போராட்டத்தில் குதிக்கப்போகிறார்கள்,

ஜனவரி 15ந் தேதிக்குள் சர்க்கார் இடைக்கால நிவாரணமாக ரூ100 வழங்க முன்வராவிட்டால், வேலைநிறுத்தம் நிச்சயம் வெடிக்கும்- என்று துறைமுகத் தொழிலாளா தலைவர் குல்கர்னி தெரிவித்தார்,

போர்ட் அண்டு டாக் தொழிலாளர்கள் இந்திய அரசாங்கத்தின்கீழ்தான் பணிபுரிவதால், அவர்களை பொதுத்துறைத் தொழில்களில் பணிபுரியும் தொழிலாளர்களைப்போல் பாவித்து, அதற்கேற்ற முறையில் தொழிற்சங்கங்களுடன்பேசி ஊதிய நிர்ணயம் செய்யவேண்டுமென்று திரு குல்கர்னி கோரினார்,

### அகில இந்திய மாநில அரசு ஊழியர்கள்

அகில இந்தியாவிலுமுள்ள மாநில அரசுகளின் அரசு ஊழியர்கள், போனஸ்கோரியும் அடிப்படைச்சம்பளத்தை உயர்த்தக் கோரியும், பழிவாங்குதலை நிறுத்தக்கோரியும், நாடுமுழுவதும் ஒருநாள் ஆட்சேப தினம் அனுஷ்டிக்கப் போவதாக சமமேளனத்தலைவர் ஸ்ரீ ராமுலு கூறினார்.

இவ்வாறு அரசியல் வேற்றுமையோ சங்கவேறுபாடோ இல்லாமல் இந்தியா முழுவதிலும் மாபெரும் போராட்டங்கள் வெடித்து வருகின்றன.

# தீக்கதிர்

## ஏற்றுமதி அதிகரிப்பு கோஷத்தின் சுயரூபம்

நமது அன்னிய நாட்டுச் செலாவணிப் பற்றாக் குறையை சரிகட்டிக் கொள்வதற்கும், உள்நாட்டுப் பொருளாதார நெருக்கடியிலிருந்து மீள்வதற்கும் வெளிநாடுகளுக்கு நமது நாட்டின் ஏற்றுமதியை நன்கு அதிகரிக்க வேண்டுமென்ற கருத்தை இந்திய அரசு இப்போது விடாது வற்புறுத்தி வருகிறது.

இதையொட்டித்தான், மத்திய சர்க்காரின் வர்த்தக அமைச்சர், நமது ஏற்றுமதியை 5 ஆண்டுகளுக்குள் 100 சதவிகிதம் அதிகரித்துக் காட்டுவோமென்று பறைசாற்றினர்.

ஆனால் சென்ற வருட ஆரம்பத்தில் அதிகரித்த ஏற்றுமதி வருட இறுதிக்குள் குறைந்து விட்டது. எனவே ஏற்றுமதியை நிரந்தரமாக அதிகரிக்க வேண்டுமென்ருல், நீண்ட காலத் திட்டம் வேண்டுமென்று, அறிக்கைகள் வர ஆரம்பித்தன. அந்நிய நாட்டுச் செலாவணியை அதிகம் சம்பாதித்துத் தரக் கூடிய பொருட்களின் ஏற்றுமதியைப் பிரத்தியேகமாக கவனிக்க வேண்டுமென்றும் வலியுறுத்தப்பட்டது.

இவ்வாறு வலியுறுத்தப்பட்ட, ஏற்றுமதிக்கு விசேஷமாகக் கருதப்பட வேண்டிய பொருட்கள்—சர்க்கரை சிமெண்டு, நிலக்கரி, எஞ்சினீயரிங் (யந்திர) சாமான்கள் ஆகும். இவைத் தவிர துணிமணிகள், தேயிலை, தோல்கள் காக்ராப்பொன், இரும்புத் தாது முதலியனவும் உள.

நம் சர்க்கரைக்கு அடுத்த 5 வருடங்களிலிருந்து 7வருடங்கள் வரை உலக மார்க்கெட்டில் நல்ல விலைகிடைக்குமாம்.சர்க்கரையினுல் கிடைக்கும்அன்னியச் செலவாணியைக்கொண்டுநாம்இறக்குமதிசெய்ய நேரிடும் உணவு தானியங்களை வாங்கிவிடலாமாம. சிமெண்டு ஏற்றுமதியின குறிக்கோள் 10 லட்சம் டன்னுக இருப்பதை 50 லட்சம் டன்னுக ஆக்கலாமாம. நிலக்கரி ஏற்றுமதி 30 லடசம் டன்னுகயாவது இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டுமாம். எஞ்சனீயரிங் சரக்குகள் இப்போது ரூ. 400 கோடிக்கு ஏற்றுமதியாவதை ரூ, 1000 கோடியாக்கலாமாம்.

ஆனல் இவ்வாறு ஏற்றுமதி அதிகரிக்க வேண்டுமென்ருல் இத்தகைய தொழில்களிலெல்லாம் உற்பத்தி பலமடங்கு அதிகரிக்கவேண்டுமாம். அதற்கான ஊக்கத்தை அளிக்க—'வர்த்தகம் —தொழில்கள் சம்பந்தமான பம்பாய் பத்திரிகையான 'எகனுமிக டைம்ஸ்'' பின்வரும் ஆலோசனைகளைக் கூறியுள்ளது:—

1 ஏற்றுமதிக்குத் தயார் செய்யும் தொழில்களுக்கு தேவைப்படும் வெளிநாட்டுச் சரக்குகள். யந்திரங்கள் யந்திரங்களின் பாகங்கள், முதலியன. காராளமாகவும் தங்கு தடையின்றியும இறக்குமதி செய்யப்பட அனுமதிக்கப்படவேண்டும்,

2 உற்பத்திக்கு அரசாங்கம் விதித்துள்ள பற்பல தடைகளும் அறவே நீக்கப்படவேண்டும்.

3 உற்பத்தி அதிகரிப்பில் மட்டுமின்றி அவ்வாறு உற்பத்தி செய்யப்பட்டுள்ள பொருட்கள் உலக மார்க்கெட்டுகளில் இதர நாட்டுப் பொருட்களுடன் போட்டி போடத்தக்க அளவுக்கு அவற்றின்விலை இருப்பதற்கு உதவவேண்டும்.

மேற்கூறிய பத்திரிகை இது சம்பந்தமாக ஏற்றுமதியை ஊக்குவிக்க கீழ்க்கண்டவாறும் எழுதியுள்ளது:—

''புதுடெல்லிக்கு இதுவரை பெரிய முதலாளிகளின் கம்பெனிகளின் பால இருந்த விரோதக் கண்ணோட்டததை விடுத்து உற்பததி சகதிகளை நன்கு செயல்படவைக்கும நோக்கோடு மததிய சர்க்காரின் தொழில் மந்திரி முன வந்திருக்கிருர்......

''தொழிலதிபர்கள் உற்பத்தியை இரட்டிப்பாக்க உறுதி கூறுகிருர்கள். ஆனுல் ஏகபோக முதலாளிகளென்று பார்க்கும கண்ணோட்டத்தை விடுத்து, ஏறறுமதி இறக்குமதி சம்பந்தமான தடைகளையும். விதிகளையும அரசாங்கம்தளர்த்தி உறபததிக்கு உதவவேண்டும். இந்த வாக்குறுதியில் நமபிக்கை வைத்து அவர்கள் கேட்பதை புதுடெலலி வழஙகவேணடும' மத்திய சர்க்கார் தொழில் மந்திரி ஏற்கெனவே இந்த அடிப்படையை எற்றுபபேசிவருகிருர்.

''சுண்ணும்பிலிருக்கிறது சூட்சுமம்'' என்பார்கள். மேற்குறிப்பிட்ட விஷயத்தில்தான் அனைத்தும் அடங்கியிருக்கிறது. பொருளாதார நெருக்கடியை தீர்த்துககொள்ள ஏற்றுமதியைப் பெருக்கிக்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்ய உற்பத்தியை அதிகரிக்க வேண்டும், அந்த உறபத்தி அதிகரிப்புக்கு பெரு முதலாளிகளை ஆதாரமாகக்கொள்ள வேண்டும், அவர்கள் கேட்பதை வழங்கவேண்டும், அவர்கள் மீதுள்ள ''பேப்பர்'' தடைகளைக்கூட நீக்கிவிடவேண்டும்.

உற்பத்தியை உண்மையாகச் செய்துமுடிக்கும் தொழிலாளிகளைப் பற்றியோ-அவர்களை வாழவைககவேண்டுமென்ற அவசியத்தைப்பற்றியோ- உற்பத்திப்பொருட்கள் உள்நாட்டு மககளுக்கு மலிவான விலையில கிடைககச் செய்ய வேண்டும் என்பது பற்றியோ- உற்பத்தி பெருக்கு சம்பந்தமாக வெளியிடப்பட்டுள்ள இந்தக்கண்ணோட்டத்தில் ஒரு வார்த்தைகூட கிடையாது, இந்திய சர்க்கார் ஆயிரம் முறை சோஷலிசம் பேசினுலும அதன் கவனமும அக்கறையும் அனைத்தும் முதலாளிவர்க்கத்தைக் குறித்துத்தான் உற்பத்திக்கு அது பின்பற்றும பாதையும் முதலாளித்துவப் பாதையே- கோடானுகோடி உழைப்பாளிமக்கள் அரசினர் கண்ணுக்குத் தெரியாது'' இததகைய கொள்கைகள் அமுலிலிருககும வரை நெருக்கடியிலிருந்து மீட்சிக்கு வழி எங்கே?

---

## சிண்டியிலிருந்து விலகினர்

உடன்குடி, ஜன. 10—

நெல்லை மாவட்டம் உடன்குடியைச் சேர்ந்த கொட்டங்காடு பகுதியில் சிண்டிகேட் காங்கிரசிலிருந்து ஹைகோர்ட்துரை கோபாலகிருஷ்ணன், சந்திரன், மணி, மின்னடி ஆகிய ஐவரும் விலகி. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கீழ் செயல்பட்டு வருகிருர்கள்.

சிண்டிகேட் காங்கிரசின் மக்கள் விரோதக் கொள்கைகளும்,நிலப்பிரபுத்துவ—முதலாளித்துவ ஆதரவுக் கொள்கைகளும பிடிக்காது விலகிய இந்த ஐவரும் இளைஞர் காங்கிரசின் தீவிர ஊழியர்களாவர்.

---

## வைகைக்கரை விவசாயிகள் மீது கைவைத்தால் காவேரிக்கரையில் பதிலடி கொடுப்போம்

### தோழர் கோ. வீரையன் முழக்கம்

மதுரை, ஜன. 8—

''கூலி உயர்வுக்காகப் போராடும் வைகைக்கரை விவசாயத் தொழிலாளர்களைத் தாக்கினுல், காவேரிக்கரை விவசாயத் தொழிலாளர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். பதிலடி கொடுப்பார்கள்''—என்று தமிழ்நாடு விவசாய சங்கச் செயலாளர் தோழர் கோ. வீரையன் பேசினுர்.

பொதும்பு கிராமத்தில் நடந்த மதுரை-முகவை மாவட்ட விவசாயிகள், விவசாயத் தொழிலாளர் மாநாட்டில் தோழர் கோ.வீரையன் பேசினுர். அவர்தொடர்ந்து பேசுகையில் குறிப்பிட்டதாவது;—

### கீழத் தஞ்சை போல் தமிழகம் முழுவதும் சிவக்கும்

''கீழத்தஞ்சையில் அறுவடை செய்த ஒவ்வொரு 56 லிட்டர் நெல்லுக்கும் 6 லிட்டர் நெல் கூலி வாங்குகிருே. ஆண் ஆனுலும் சரி, பெண் ஆனுலும சரி.

கீழத் தஞ்சைக்கு மட்டும் கூலிச் சட்டம் வந்தது என்ருல், அது முதலமைச்சர் கருணுநிதியின் கருணையினுலா? அல்ல.

வெண்மணியில் 44 உயிர்களைப் பலி கொடுத்ததற்குப் பிறகுதான் கூலிச் சட்டம்வந்தது, ஒரு கிராமம் பாக்கியில்லாமல் ஆயுதப் போலீசின் அடி உதைகளுக்கு ஆளான பிறகுதான் அத்தனை கொடுமைகளுக்கும் அடிபணியாமல் எதிர்த்துப் போரிட்ட பிறகுதான் — கூலிச் சட்டம் வந்தது.

அப்படிப்பட்ட போராட்டத்தை தமிழ மெங்கும் நடத்தினுல்தான் — அத்தகைய தியாகங்களைச் செய்தால்தான் அந்தச் சட்டம் எங்கும் வரும் என்று அரசு நினைக்குமேயானுல்— அதற்கும் 'தயார், தயார்' என்று விவசாயத் தொழிலாளர்கள் எங்கும் கிளம்பிவிட்டார்கள்.

ஜாதிக் கொடுமையை எதிர்த்து, சுரண்டல் கொடுமையை எதிர்த்தும் போர்க்கொடி தூக்க மாநாடு முடிவு செய்திருக்கிறது. அதற்கு அனைவரும் ஆதரவு தரவேண்டும்''—என்று கேட்டுக் கொண்டார்.

---

## பெர்னுண்டஸ் பேச்சு

சேலம், ஜன. 8—

தொழிலாளிவர்க்கத்தின் அரசியல் பொருளாதார உரிமைகளை மத்திய அரசு குறைத்து வருகிறது என்றும் தங்கள் உரிமைகளை காத்துக்கொள்ள தொழிலாளிவர்க்கம் போராட முன்வரவேண்டும் என்றும் இங்கு நடைபெற்ற சோசலிஸ்ட் கட்சிக் கூட்டத்தில் அக்கட்சியின் தலைவர் பெர்னுண்டஸ் பேசினுர்.

தமிழ்நாடு உட்பட அனைத்து மாநில - மத்திய அரசுகளிலும் ஊழல் பெருகிவிட்டது எனவும் அவர் குறிப்பிட்டார்.

இன்னும் பொருளாதார நிலைமை சீர் குலையும் முன்பு இந்திரா காந்தி தேர்தலை நடத்தி விட முயற்சிக்கிருர் என்றும் மக்களின் கவனத்தை திசை திருப்ப முயற்சிக்கிருர் என்றும் அவர் கூறினுர்.

---

## சர்க்கரை போராட்டத்திற்கு அமைச்சரின் முதலாளி ஆதரவே காரணம்

### தோழர் உமாநாத் அறிக்கை

திருச்சி, ஜன. 9—

தமிழ்நாட்டு சர்க்கரை ஆலைகளில் வேலை நிறுத்தம் நடைபெறுவதற்கு காரணம் தமிழக அரசின் முதலாளி ஆதரவுக் கொள்கைகளே யன்றி, அமைச்சர் கூறுவது போல் தொழிற்சங்கங்களிடையே உள்ள வேறுபாடுகள் காரணமல்ல என்று சி ஐ டி யூ தமிழ் மாநில பொதுச் செயலாளர் தோழர் உமாநாத் அறிக்கை ஒன்றில் கூறியுள்ளார்.

மேலும், வேலை நிறுத்தத்தை நிறுத்த அமைச்சர் கூறும் யோசனைகள் வேலை நிறுத்தத்திற்கு ஒரு முடிவு காண்பதற்கு பதிலாக நீடிக்கச் செய்யவே வழி செய்யும் என்றும் போராட்டத்தை உடைக்க நினைக்கும் தமிழக அரசின் எண்ணத்தையே வெளிக்காட்டுகிறது என்றும் அவர் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

உத்திரப்பிரதேசத்தில் சர்க்கரை ஆலைத் தொழிலாளருக்குக் கொடுக்கப்படும் ஊதிய விகிதத்தை சுட்டிக் காட்டி அதைவிட தனது சிபாரிசு அதிகம் என்கிருர் அமைச்சர்.ஏறகனவே தமிழ்நாட்டு ஊதிய விகிதம் உத்திரபிரதேசத்தைவிட அதிகமானது. அது அமைச்சர் தந்த வரப்பிரசாதமல்ல, உத்திரபிரதேசத்து ஊதியத்துடன் ஒப்பிடும் அமைச்சர் நெல்லிகுப்பம் ஊதியத்துடன் ஒப்பிடத்தயாரா?

அங்கு முதலாளிகள் கொடுப்பதைவிட குறைவாகத்தானே ராசாராம் கூறுகிருர். அதை கூறினுல் குட்டு வெளியாகிவிடும் என அஞ்சுகிருர் என்று தோழர் உமாநாத் சுட்டிக்காட்டினுர்.

வேலை நிறுத்தம் நடப்பதற்கு தொழிற்சங்கங்களுக்கிடையே உள்ள பிளவே காரணம் என்கிருர்.அமைச்சர். அது வெறும் கட்டுக் கதை. அமைச்சரின் முதலாளி ஆதரவுக் கொள்கையே இதற்கு காரணம்.

---

## தெ. வியட்நாம் பொம்மை அரசின் மௌன விரதம்

சைகோன், ஜன, 8—

ஒப்பந்தத்தைமீறி தாக்குதல்களை தொடுத்த தென் வியட்நாம் பொம்மை அரசாங்கம், பதிலடிகொடுத்த புரட்சிப்படைகளிடம் தனது புவோக்லாங் மாநில தலைநகரை பறிகொடுத்துவிட்டு அன்னியநாடுகளிடம், குறிப்பாக அமெரிக்காவிடம் உதவிக்காக கெஞ்சிக்கொண்டிருக்கிறது.

அத்தலைநகர் வீழ்ச்சியடைந்ததற்காக 3 நாட்களை மௌன நாட்களாக பொம்மை அரசு பிரகடனம் செய்தது.

---

## சிறைசெல்லத் தயார்!

### பொதும்பு விவசாயிகள் மாநாட்டில் தாய்மார்கள் ஆரவாரம்

மதுரை, ஜன. 8—

பஞ்சத்தின் கொடுமைகளாலும, விலைவாசி உயர்வினுலும் கிராம மக்கள் படும் இன்னல்களை உருக்கமாக எடுத்துக் கூறிவிட்டு, ''இவற்றைப் போக்குவதற்கு முன்வராத அரசினை எதிர்த்து, இங்கு கூடியுள்ள தாய்மார்கள் அனைவரும சிறை செல்லத் தயாரா?'' — என்று மதுரை-முகவை மாவட்ட விவசாய சங்கப் பேரணியில் பேசிய தமிழக ஜனநாயக மாதர் சங்கத் தலைவர் கே பி. ஜானகியம்மாள் கேட்க — அங்கு கூடியிருந்த ஆயிரத்துக்கு மேற்பட்ட விவசாயப் பெண்களனைவரும், 'தயார்'! 'தயார்'! என்றுபதில் அளித்த காட்சியே ஓர் ஆவேசமிக்க காட்சியாக விளங்கிற்று.

இந்த ஜனவரி மாதம் 20-ந் தேதியன்று, விலைவாசிகளைக் கட்டுப்படுத்தக்கோரியும் — வறட்சி நிவாரண வேலைகளுக்கு கூடுதல் பணம் ஒதுக்கக்கோரியும், மலிவு தானியக் கடைகள் திறக்கக் கோரியும், மறியல் செய்த் தயாரா?—என்று மீண்டும கேட்க, 'தயார்'—என்று கடல் அலை போல் அனைவரும் ஆரவாரிக்க— மூன்ருவது தடவையாக, ஆட்சியாளர்கள் போலீசை ஏவினுல 'தடியடிபடத் தயாரா'? என்று வினவ, அனைவரும் 'தயார்'—என்று இடிமுழக்கமென பதில் அளித்தார்கள்.

---

## வேலூர் மருத்துவமனையில் வேலை நிறுத்தம் தொடர்கிறது

### மாணவர்கள் ஆதரவு

வேலூர், ஜன. 8—

கிருஸ்துவ மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த மருத்துவமனையில் ஊழியர்களின் வேலை நிறுத்தப் போராட்டம் நிர்வாகத்தின் அடாவடிப் போக்கால் நீடிக்கிறது.

கடந்த 7-ந தேதி இரவு ஒரு டாக்டர் உட்பட 23ஊழியர்களுக்கு புதிதாக வேலை நீக்க நோட்டீஸ் கொடுத்துள்ளதுநிர்வாகம். மருத்துவமனையைச் சுற்றி போலீசை கொண்டுவந்து குவித்திருக்கிறது நிர்வாகம்.

மருத்துவமனை நிர்வாகிகளின் பிரதிநிதிகளுக்கும் ஊழியர்களின் சார்பாக அனைத்துக கட்சிகளின்பிரதிநிதிகளுக்குமிடையே வட ஆற்காடு மாவட்ட கலெக்டர் தலைமையில் பேச்சு வார்த்தை நடந்தது. பேச்சு வார்த்தையில்ஊழியர்களின் 3 பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர்.

பிரச்சினையைத் தீர்க்க ஒரு கமிட்டி அமைப்பது என யோசனை எழுப்பப்பட்டது.ஆனுல்வேலைநீக்கநோட்டீசைதிரும்பப்பெறமுடியாது என அடம்பிடித்தது நிர்வாகம். எனவே, பேச்சு வார்த்தை எவ்வித முன்னேற்றமும் இல்லாமல் முடிவடைந்தது.

மருத்துவமனை ஊழியர்களின் நியாயமானபோராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்து வேலூரில் உள்ள அரசுக் கலைககல்லூரிமாணவர்களும், பாலிடெக்னிக் மாணவர்களும் இன்று வகுப்புக்கு செல்லாமல வேலை நிறுததம செய்தனர்.

---

## பஸ் தொழிலாளர் திடீர் ஸ்டிரைக்

திருநெல்வேலி, ஜன.8—

தங்கள் சக தொழிலாளி ஒருவரை சப்-இன்ஸ்பெக்டர் தாக்கியதால் உடனடியாக பஸ் கண்டக்டர்களும், டிரைவர்களும் வேலை நிறுத்தம் செய்தனர். இதன் காரணமாக நெல்லையில் இரவு 9 மணிக்கு போக்குவரத்துகள் ஸ்தம்பித்தன. இவ்வேலை நிறுத்தம் 4 மணி நேரம் நீடித்தது.

வேலை நிறுத்தம் ஏற்பட்டவுடன் தொழிலாளர் பிரதிநிதிகளும், போலீஸ் சூப்பிரெண்டெண்டும் சந்தித்து பேசினர். பஸ் தொழிலாளரை தாக்கிய சப் இன்ஸ்பெக்டர் மீது நடவடிக்கை எடுப்பதாக போலீஸ் சூப்பிரெண்டெண்ட வாக்குறுதி அளித்தபின்பே தொழிலாளர்கள் வேலைக்குச் சென்றனர்,

---

## சி ஐ டி யூ ஊழியர் மூவருக்கு கத்திக் குத்து

துர்க்காபூர், (மே. வங்கம்) ஜன. 10—

இங்குள்ள பாரதி ரோட்டில் சி .ஐ. டி. யூ. தோழர்களை ஆளும் காங்கிரஸ் குண்டர்கள் பயங்கர ஆயுதங்களால் தாக்கினர். கடுமையான கத்திக்குத்துக்கு ஆளான தோழர்கள் கல்யாண்சாத்ரா ரகுநாத் ஆடா, சச்சின சட்டர்ஜி ஆகிய மூவரும் மருத்துவமனையில்சேர்க்கப்பட்டுள்ளனர்.

ஸ்தல மக்கள் துரத்தி குண்டர்களில் இருவரைப் பிடித்து போலீசில் ஒப்படைத்துள்ளனர். ஆனல் போலீசார் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

வருகிற 24 முதல் 27-ந் தேதி முடிய நடக்கவிருக்கும் துர்க்காபூர் எஃகுத்தொழிலாளர் மாநாட்டை நடக்கவிடாமல் தடுக்கும் நோக்கத்துடனேயே, காங்கிரஸ் குண்டர்கள் இத்தகை பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளனர்.

---

## ரப்பர் விலை உயர்வு

கோட்டயம், ஜன. 8—

கடந்த பத்தே நாட்களில் ரப்பரின் பிரதானச் சந்தையான கோட்டயத்தில் ரப்பரின் விலை குவிண்டாலுக்கு ரூ 200 வீதம் உயர்ந்தது. இதன் காரணமாக இன்று அதன் விலை குவிண்டால் 950 ஆகி விட்டது.

ரப்பர்தோட்ட முதலாளிகள் ரப்பர்களை பதுக்கிவைத்ததன் விளைவே இவ்விலை உயர்வுக்கு காரணம் எனப்படுகிறது. ரப்பரின் தேவை அதிகரிக்கப்பட்ட போதிலும் சந்தைக்கு ரப்பர்வரவில்லை.

இவ்வாரக் கடைசிக்குள் ரப்பரின் விலை குவிண்டால் ரூ. 1000-க்கு உயரக்கூடும என்றும்கூறப்படுகிறது.

---

## சாமி பீடத்துக்கு அடியில் கள்ளத் தங்கம்

கல்கத்தா, ஜன. 10—

வருமான வரி அதிகாரிகள் இங்கு ஒரு பெரிய செல்வந்தரின் வீட்டுக்குள் புகுந்து, வரவு-செலவு, சொத்துப் பத்து விபரங்களை சோதனை போட்டு ஆராய்ந்தார்கள். காட்டிய கணக்குப்படி சகலமும் சரியாக இருந்தன. என்ருலும், அதிகாரிகளுக்கு சந்தேகம் விட்டபாடில்லை.

பூஜை அறைக்குள் அதிகாரிகள் புகுந்தார்கள். அப்போது அந்த செல்வந்தர் நடுங்கினர். 'ஏன் நடுங்குகிறீர்கள்?'—என்று கேட்டார் அதிகாரி.

'ஒன்றுமில்லை அது பூஜை அறை. எங்கள் குலதெய்வம் இருக்கும் அறை. அதில் எங்கள் குடும்பத்தினரைத் தவிர அன்னியர் யாரும் நுழைவதில்லை'—என்ருர் செல்வந்தர்.

சந்தேகம் வலுத்தது, 'நுழைந்தால் சாமி கோபித்துக் கொள்ளாது'—என்று கூறிவிட்டு, உள்ளே நுழைந்தார்.

சாமி சிலையும் பூஜைப் பாத்திரங்களுமே இருந்தன. அதிகாரி வெளியில் வந்து விடுவார் என்று ஆவலோடு எதிர்பார்த்தனர்.

ஆனுலும் அதிகாரிக்குச் சந்தேகம் தலையைக் குடைந்தது.

சாமியாக இருந்தால் என்ன? பூதமாக இருந்தால் என்ன?

பணியாட்களை ஏவினுர். கடப்பாரைகள் இடி இடித்தன. செல்வந்தர் கதறினுர்.

சாமியை அலாக்காகத் தூககி வைத்து விட்டு, அதன் கீழ் பார்த்தபோது, ஒரு இரும்புப் பெட்டி! அதில் நிறைய தங்க நகைகள்! விலையுயர்ந்த நவரத்தினங்கள்!

---

## எழுத்தாளர்களிடையே 'செம்மலர்' ஆசிரியர்

சென்ற 5-ம் தேதியன்று, சென்னை மாவட்ட நூலக நிலையத்தில் சென்னை மக்கள் எழுத்தாளர் சங்கக் கூட்டம் நடைபெற்றது.

பழம்பெரும் எழுத்தாளரான நாரண, துரைக்கண்ணன் உட்பட சுமார் 40 எழுத்தாளர்கள் இதில் கலந்து கொண்டார்கள்.

'செம்மலர்' ஆசிரியர் தோழர் கே முத்தையாவுடன் இலக்கியம் பற்றி கலந்துரையாடல் நிகழ்ச்சி நடைபெற்றது.

இதனை மக்கள் எழுத்தாளர் சங்கச் செயலாளர் தோழர் செநதில்நாதன் துவக்கி வைத்தார். மக்கள் எழுத்தாளர் சங்கத்திலுள்ளோர், செம்மலர் எழுத்தாளர்களுடன் தோழமை உறவு கொள்ள விழைவதாகவும், அதற்கு செம்மலர் ஆசிரியர் உதவி செய்ய வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

செம்மலரின் குறிக்கோள்கள் பற்றி தோழர் முத்தையா விரிவாக எடுத்துரைத்தார். 'நம் மக்களது வாழ்க்கையை யதார்த்தமாகவும் ஜனநாயக உணர்வுடனும் பிரதிபலிக்கும் அனைத்து எழுததாளர்களையும் செம்மலர் ஊக்குவிக்கும்' என்ருர். 'மார்க்சிஸ்டுகள், மார்க்சிய ஆதரவாளர்களை மட்டுமலல, இந்த நாட்டின் ஜனநாயக வாழ்வைப் பாதுகாப்பதில் ஆர்வங்கொண்ட அனைவரையும் செம்மலரில் எழுதும்படி அழைக்கின்ருேம்' என்ருர்.

'முற்போக்கு எழுத்தாளர்களாகிய உங்களுடைய கருத்துக்களுககு பிரதான எதிரிகளாக இருப்பவர்கள் யார் என்று கணித்திருக்கிறீர்கள்!' என்று ஒருஎழுத்தாள நண்பர் கேட்டார்.

நண்பர்களைக் குறிப்பிடுவதைவிட இன்று ஜனநாயக இலக்கியத்திற்குத் தீமை செய்யும் போக்குகளைக் குறிப்பிடுவதே சரியாக இருக்கும் என்று கூறி, அந்தப் போககுகள் என்ன என்பதையும் தோழர் முத்தையா குறிப்பிட்டார்.

1. இன்றைய சமுதாய வாழ்விலுள்ள அலங்கோலங்களையும், இதற்குப் பின்னணியாகவுள்ள சமுதாய அமைப்பையும நியாயப்படுத்தல்.

2. யதார்த்த வாழ்க்கைக்குப் புறம்பாக, அதிருஷ்ட வசமாக வாழ்க்கைப் பிரச்னைகளுக்கு தீர்வு காண்பதாகக் காட்டுதல்—தெய்வாதீனமாக நிகழுதல், திடீர் பணக்காரனுகுதலை பொதுமைப்படுத்துதல்—

3. மத நம்பிக்கைகளையும், மூடப்பழக்கங்களையும் சாதுரியமாக நியாயப்படுத்துதல்—

4. காமவெறியூட்டும் இலக்கியங்களை வியாபார நோக்கத்துடன் உருவாக்குதல்—

5. ஜனநாயக விரோத பாசிஸ்ட் சக்திகளுக்கு ஊக்கமளித்தல்—

இவை போன்ற போக்குகளை எதிர்ப்பதே முற்போக்கு எழுத்தாளர்களின் குறிக்கோளாக இருக்க வேண்டுமென்ருர்.

இந்தக் கருத்துக்களின் அடிப்படையில் வந்திருந்த எழுத்தாளர்கள் பல ஆலோசனைகளை வழங்கினர் செம்மலரில் எழுதுவதாகவும கூறினர். இவ்வாறு சிறப்பாக நடந்த இக்கூட்டத்திற்கு வந்திருந்த அனைவருக்கும் தோழர் செந்தில்நாதன் நன்றி கூறினுர்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-1 பைபாஸ் :ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.